# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

## சொல்வளமே மொழி வளம்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 1 விளைச்சல் : 6 திருவள்ளுவர் ஆண்டு 2051 நவம்பர் திங்கள் - 2020

- சட்டக் கலைச்சொற்கள்
- தமிழ்நாடு நாள்
- மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு...
- சொற்சுவையும் சொல்லாக்க உத்திகளும்
- சட்டத் தமிழாக்கம்



# சட்டக் கலைச்சொற்கள்

1. Vigilance – விழிப்புக்காவல்
2. vigilance cell – விழிப்புப் பணிப்பிரிவு
3. violation of rules – நெறிகளை மீறல்
4. Heir-at-law – சட்டவழி மரபுரிமையர்
5. Gift deed – கொடை ஆவணம்
6. Judicial act – நயன்முறைச்செயல்
7. Judicial power – நயன்மன்ற அதிகாரம்
8. Juvenile court – குற்றச்சிறார் நயன்மன்றம்
9. Legal advisor – சட்ட அறிவுரையாளர்
10. Oral evidence – வாய்மொழிச்சான்று
11. Personal right – தனியுரிமை
12. Personation – ஆள்மாறாட்டம்
13. Political rights – அரசியல் உரிமைகள்
14. Profession tax – தொழில்வரி
15. Property right – சொத்துரிமை
16. Revenue court – வருவாய்த் துறை நயன்மன்றம்
17. Advisory committee – அறிவுரைக்குழு
18. Bail bond – பிணை முறியம்
19. Bailiff – நயனாணை நிறைவேற்றுநர்
20. Benefactor – நலஞ்செய்பவர்
21. Cadastral surveyor – வரிவிதிப்பு நில அளவையர்
22. Cosmopolitan – பொதுநோக்காளர்
23. Financial crisis – நிதிநெருக்கடி
24. Footprint evidence – காலடிப்பதிவுச்சான்று
25. Forged seal – பொய்ப் புனைவு முத்திரை

சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.


# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

திருவள்ளுவர் ஆண்டு 2051 - சார்வரி ஐப்பசி
நவம்பர் 2020

ஆசிரியர் : தங்க. காமராசு
இயக்குநர்

பொறுப்பாசிரியர் : முனைவர் வே. கார்த்திக்

இதழ்க்குழு : திருமதி. ஜெ. சாந்தி
திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திரு. ப. தீபக்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர், சென்னை - 600 028.
கட்டணமில்லா அழைபேசி : 14469
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com


உலகத் தமிழர்களின் படைப்புகள், செய்தித் துணுக்குகள், நிகழ்வுகளின் ஒளிப்படங்கள் ஆகியவை வரவேற்கப்படுகின்றன



# ஆசிரியர் பேசுகிறார்

அன்பானவர்களே வணக்கம்!

பெருந்தொற்றிலிருந்து மெல்ல மெல்ல விடுதலை பெற்று வருவது மகிழ்ச்சியளிக்கிறது. பெருந்தொற்றைக் கட்டுப்படுத்தும் நடவடிக்கையில் தமிழ்நாடு அரசு சிறந்த முறையில் செயலாற்றி வருகிறது என நடுவணரசு பாராட்டியிருக்கிறது. மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் அவர்களும் மாண்புமிகு அமைச்சர் பெருமக்களும் பெருந்தொற்றுக்காலத்திலும் களத்தில் இறங்கி மக்கள் பணியாற்றியதை மற்ற மாநிலங்கள் பாராட்டிக் கொண்டிருக்கின்றன. அரசியல் மாறுபாடு இல்லாமல் தமிழ்நாட்டுத் தலைவர்கள், மாவட்ட ஆட்சியாளர்கள், காவல்துறையினர், அரசு அலுவலர்கள் மற்றும் தன்னார்வத் தொண்டு நிறுவனங்கள் என அனைவரும் போட்டி போட்டுக்கொண்டு தொண்டு புரிந்ததை மக்கள் மனம் நெகிழப் பாராட்டிக் கொண்டிருக்கிறார்கள்.மேலேசுட்டிக்காட்டப்பட்டுள்ள அத்துணை நல்லவர்களாலும்தான் பெருந்தொற்றுப் பரவலை இந்த அளவுக்குக் கட்டுப்படுத்த முடிந்தது. உலகையே முடக்கிப் போட்ட இந்தப் பெருந்தொற்று தமிழ்நாடு அரசு இயந்திரத்தை எந்தவித பாதிப்புக்கும் உள்ளாக்கவில்லை. அதற்கு எடுத்துக்காட்டாக, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தையே சுட்டிக்காட்டலாம். பெருந்தொற்று மாதங்களான 2020 ஏப்ரலிலிருந்து ஆகஸ்ட்டு வரை இந்த இயக்ககத்தின் செயல்பாடுகளைக் கடந்த 5 இதழ்களிலும் தெள்ளத்தெளிவாக எழுதியிருக்கிறேன். அதன் தொடர்ச்சியாக 2020 செப்டம்பர் மற்றும் அக்டோபர் மாதங்களின் பணிகளை இங்கே குறிப்பிட்டாக வேண்டும். உலகத் தமிழாராய்ச்சி நிறுவன வளாகத்தில் உள்ள பழுதடைந்த ஒரு கட்டடத்தில் பல இன்னல்களுக்கும் இடர்ப்பாடுகளுக்கும் நடுவில் பணிகளை மேற்கொண்டு வந்த இவ்வியக்ககத் தொகுப்பாளர்கள், பணியாளர்களை நிம்மதிப் பெருமூச்சு விட வைத்தது இயக்ககத்தின் இடமாற்ற அரசாணை. மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் அவர்கள் தாய்மொழியாம் தமிழ்மொழி மீது கொண்டிருக்கும் அக்கறையாலும் ஈடுபாட்டாலும் தமிழ் வளர்ச்சிக்கு ஆணிவேராகத் திகழும் அகரமுதலித் திட்ட இயக்ககம் உலகத் தரத்துடன் கூடிய ஒரு புதிய இடத்தில் இயங்க வேண்டும் என்ற விருப்பம் கொண்டு மாண்புமிகு உள்ளாட்சித் துறை அமைச்சர் திரு எஸ். பி.வேலுமணி அவர்களின் ஒத்துழைப்போடு சென்னை – பட்டினப்பாக்கம் எம்.ஆர்.சி. நகரில் உள்ள நகர் நிருவாக அலுவலக வளாகத்தில், புதிதாக எழுப்பப்பட்டுள்ள 11 தளங்களைக் கொண்ட கட்டடத்தின் முதல் தளத்தை ஒதுக்கி வழங்கினார்கள். அதற்குரிய அரசாணை பெறப்பட்டு, புதிய இடத்தின் உள்கட்டமைப்புப் பணிகளைத் தொடங்கி அக்டோபர் மாத இறுதியில் நிறைவு செய்திருக்கின்றோம். தற்போது இடமாற்றம் செய்யப்பட்டுவிட்டது.

மாண்புமிகு முதலமைச்சர் அவர்களின் தமிழ்ப்பற்றுக்கு அகரமுதலித் திட்ட இயக்கக இடமாற்றத்தையே எடுத்துக்காட்டாகக் கொள்ள முடியும். தமிழ்மொழியைத் தொழில்நுட்ப உதவி கொண்டு உலகம் முழுவதும் பரப்ப முடியும் என்பதை விரைவில் அகரமுதலித் திட்ட இயக்ககம் உறுதிப்படுத்த இந்த இடமாற்றம் பெரிதும் பயன்படும். வெளி உலகம் அறிந்திடாத வகையில் மிகவும் அமைதியாக, எந்தவித ஆர்ப்பாட்டமும் விளம்பரமும் இல்லாமல் மிக மிக அரிய, முதன்மையான தமிழ்ப்பணிகள் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் நடைபெற்றுவருகின்றன. இவ்வியக்ககத்தின் செயல்பாடுகள் மக்களுக்கு முழு பயனாகக் கிடைக்கும்போது இவ்வியக்ககத்தின் தேவையை உலகத்தமிழர்கள் உணர்வார்கள். சுமார் 50 இலட்சம் ரூபாய் செலவில் 2,500 சதுரடி அளவில் கட்டமைக்கப்பட்டுள்ள இயக்ககத்தின் தளத்தில் மொழி ஆய்வுக் கூடம் (சொற்குவைத் தொழில்நுட்பப் பிரிவு) அமைக்கப்பட்டுள்ளது. 23 கணினித் தொழில்நுட்பப் பணியாளர்கள் துறைவாரியாகக் கலைச்சொற்களைப் பிரித்து அவற்றை எளிதாகத் தெரிந்துகொள்ள மென்பொருளை உருவாக்குவது, தேவையான தமிழ்ச்சொற்களைக் குரல் வழியில் கண்டறிவது, தமிழ் அகராதிச் செயலியை உருவாக்குவது, 24 மணி நேரமும் உலகத்தின் எந்த மூலையிலிருந்தும் தமிழ்ச்சொல் சார்ந்த தரவல்களைக் கேட்டுப் பெறத்தக்க வகையில் கட்டணமில்லா அழைமையத்தை அமைப்பது போன்ற பல்வேறு பணிகள் இந்த ஆய்வுக்கூடத்தில் நடைபெற இருக்கின்றன. இந்த இயக்ககத்தின் ஒவ்வொரு பகுதியும் எந்தெந்தப் பணிகளைச் செய்யப் போகின்றன என்பதை அடுத்த இதழில் விரிவாக எழுதுகிறேன். அதற்கு முன் புதிய அலுவலகத்தை நீங்களும் ஒருமுறை நேரில் வந்து பார்வையிடுங்கள். தமிழும் தமிழ்நாடும் உங்கள் கண்களுக்கு முன்னால் ஒரு நம்பிக்கையை உருவாக்கும்.

மீண்டும் சந்திப்போம்

# அறிய வேண்டிய அரிய செய்தி - 6

## 'வித்திட்டதமிழ்''

'எழுவது முதல் விழுவது வரை அன்றாடம் நம் செயல்பாடுகளில் அறிவியலின் பயன்பாடு நீக்கமற நிறைந்துள்ளது. அதுமட்டுமன்றி கலை, இலக்கியம், மருத்துவம், பொழுதுபோக்கு என எந்தத் துறையானாலும் அறிவியலின் பங்கு அளவற்றது என்றே கூறலாம். "அறிவு" என்ற வித்திலிருந்து பிறந்தது அறிவியல் என்றால், உணர்வு எனும் வித்திலிருந்து தோன்றியது இலக்கியம் எனலாம். ஏன்? எதனால்? எப்படி? என்ற தேடல்களின் முடிவே அறிவியல் கண்டுபிடிப்புகளாகும். அறிவியல் கண்டுபிடிப்புகள் பெரும்பாலும் வெளிநாட்டு அறிஞர்களின் முயற்சியே என்று அறிகிறோம். ஆனால் அக்கண்டுபிடிப்புகளுக்குப் பண்டைய தமிழர்களே முன்னோடிகளாக இருந்துள்ளனர் என்பதைச் சில சான்றுகள் மூலம் விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

பிரான்சு நாட்டுஅறிஞர் "ப்ளேய்ஸிபாஸ்கல்" "அழுத்தத்தால் நீர்ப்பொருள் சுருங்குவதில்லை" என்றுரைத்தார். அதாவது தண்ணீரை ஒருகலத்துள் அமுக்கித்திணிக்க முடியாது என்று அறிஞர் பாஸ்கல் கூறினார். அறிஞர் பாஸ்கலின் காலம் பதினேழாம் நூற்றாண்டாகும். அவர்கூறும் இக்கருத்தை அவருக்குப் பலநூற்றாண்டுகளுக்கு முன் வாழ்ந்த ஔவையார் அன்றே தன் மூதுரைப் பாடலில்,

"ஆழ அமுக்கி முகக்கினும் ஆழ்கடல்நீர்
நாழி முகவாது நானாழி"

என்று கூறிவிட்டார். அதாவது ஆழ்கடலிலுள்ள நீரை ஒரு படியைக் கொண்டு அமுக்கி முகக்கினும் நாலுபடி நீரைக் கொள்ளாது என்று எடுத்துரைத்துள்ளார்.

அடுத்து, மனிதன் இயற்கையை ஆராயத் தொடங்கிய போது ஓர் உண்மை புலப்பட்டது. ஒன்றாயிருந்த விதை வேராய், அடிமரமாய், கிளையாய், கொம்பாய், கவடாய், இலையாய், பூவாய், காயாய் என்று பலவகைகளாக மாறுகிறது. இக்கொள்கைக்கு 'பரிணாமவாதம்' என்று ஆய்வாளர்கள் பெயரிட்டனர். இதன்வழி உலகில் உயிர்தோன்ற எதுஅடிப்படை? என்று கேள்வி எழுந்தது. விசும்பு என்றும், மண், நீர், காற்று, தீஎன்றும் ஒவ்வொன்றையும் உயிர்தோன்ற அடிப்படை என்றனர். இந்த ஐந்தும் அடிப்படை என்றார் அறிஞர் அரிஸ்டாட்டில் (கி.மு. 384–322). இக்கருத்தைப் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே தொல்காப்பியர். மரபியல் 91ஆம் நூற்பாவில்,

"நிலம் தீ நீர் வளி விசும்போடு ஐந்தும்
கலந்த மயக்கம் உலகம்" என்று கூறுகிறார்.

அரிஸ்டாட்டில் நிறுவிய ஆய்வை ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே நம் தொல்காப்பியர் கூறிவிட்டார்.

அடுத்து, புவியீர்ப்பு விசையைக் கண்டறிந்த அறிஞர் ஐசக் நியூட்டன், வேற்று விசையால் தூண்டப்படாத வரையில் நிற்கின்ற பொருள் நின்று கொண்டேயிருக்கும்; ஓடுகின்ற பொருள் அதேவேகத்தில் அதே திசையில் ஓடிக் கொண்டே இருக்கும் என்றார். நியூட்டன் 18 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவர். நியூட்டனின் ஆய்வுச் சிந்தனையை 9ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த மாணிக்கவாசகர் திருவாசகத்தில், 'திருவண்டப்பகுதியில்' (109–111) கூறியிருக்கிறார்.

"நடப்பன நடாஅய்க் கிடப்பனகிடா அய்

நிற்பன நிறீஇச் சொற்பதங்கள் கடந்த தொல்லோன்" என்று விளக்கியுள்ளார். இறைவன் பார்வை இல்லையென்றால் நடப்பனவும்கிடப்பனவும் அவ்வப்படியே இருக்கும் என்றார். இறை உணர்வுப்பாடலில் நியூட்டனின் அறிவியல் சிந்தனைக்கு, அன்றே மாணிக்கவாசகர் வித்திட்டார் என்று கூறலாம்.

இறுதியாக, அணு பற்றி நிறைய ஆராய்ச்சிகள் இப்போதும் நடந்து கொண்டிருக்கின்றன. ஆக்கத்திற்கும் அழிவிற்கும் பயன்படும் "அணு" பற்றி நம் தமிழ்ச் சான்றோர் பலநூற்றாண்டுகளுக்கு முன்பே கூறியுள்ளனர்.

"அணுவைத் துளைத்தேழ் கடலைப்புகட்டி

குறுகத் தறித்த குறள்" என்றார் ஔவையார்.

"அணுவில் அணுவினை ஆதிப்பிரானை
அணுவில் அணுவினை ஆயிரம்கூறிட்டு
அணுவில் அணுவை அணுகவல்லார்கட்கு
அணுவில் அணுவை அணுகலுமாமே" என்றார் திருமூலர்.

அணுவைப் பிளப்பது எவ்வளவு கடினமோ அவ்வளவு கடினம் ஆண்டவனை அறியமுற்படுவது என்கிறார் திருமூலர்.

"சாணினும் உளன் ஓர்தன்மை அணுவினைச்
சதக்கூறிட்ட கோணினும் உளன்" என்று

அணுவை நூறு (சதக்) கூறிட்டு என்று பாடி ஆயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு பேசப்போகும் செய்தியை அன்றே கூறிவிட்டார் கம்பர்.

இவ்வாறு அறிவியல் கண்டுபிடிப்புகளுக்கு முன்னோடியாகத் தமிழர் இருந்துள்ளனர் எனும் போதே தமிழின் தொன்மை தெரியவருகின்றது. அறிவியல் சிந்தனை களை அன்றே வாழ்க்கை உண்மையாகவும் உலக உண்மையாகவும், இறையுணர்வாகவும் இலக்கியத்தில் பதிவு செய்துவிட்ட தமிழரின் அறிவுத்திறத்தை எண்ணிப் பெருமிதம் கொள்வோம். அன்னைத் தமிழைப் போற்றுவோம்.

முனைவர்மு.கோமதிவள்ளியம்மை

தமிழறிஞர்



# தமிழ்நாடு நாள்
## நவம்பர் 1

உலகில் அமைந்த அனைத்து நாடுகளின் பெயர்களும் அந்நாட்டு மக்கள் பேசும் மொழியின் பெயராலேயே அமைந்துள்ளன. தமிழ்மொழி பேசும் நாடும் தமிழ்நாடு என்றே அமைந்திருந்தது. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே தமிழ்நாட்டுக்கு இந்தப் பெயர் வழங்கியிருப்பதாக வரலாறு பதிவு செய்திருக்கிறது.

வரலாற்றாசிரியர் பிளினி (கி.பி. 23–79) தமிழ்நாட்டை ‘டிமிரிகா’ என்று குறிப்பிட்டுள்ளார். பெரிப்ளூஸ் (கி.பி. 40–70) மரியா எரிதிரியா என்ற நூலில் ‘டிமிரிகா’ என்றே எழுதியுள்ளார். ‘டிமிரிகா’ என்பது தமிழகம் என்பதன் கிரேக்க ஒலிவடிவம். தாலமி (கி.பி. 100–170) என்ற எகிப்திய வரலாற்றாசிரியர் ‘லிமரிகா’ என்று எழுதினார். இது டிமிரிகா என்பதன் எகிப்திய மொழி திரிபு. உரோம் நாட்டுப் பழைய வரைபடத்தில் தமிழ்நாடு ‘தாமரிகா’ என்ற பெயரில் குறிப்பிடப்பட்டுள்ளது.

பழந்தமிழ் இலக்கியங்களில் தமிழ் நாடகம் என்று பரிபாடல் குறிக்கிறது. தமிழகம் என்று புறநானூறு, அகநானூறு, பதிற்றுப்பத்து நூல்களிலும் குறிப்பிடப்பட்டுள்ளது.

தொல்காப்பியப் பாயிரம்,

“வடவேங்கடம் தென்குமரி

ஆயிடைத் தமிழ்கூறு நல்லுலகம்”

எனக் குறிப்பிடுகிறது. தமிழ்நாடு, தமிழ் நன்னாடு எனச் சிலப்பதிகாரம் அழைக்கிறது.

தமிழ்நாட்டைச் சேர, சோழ, பாண்டியர்கள் பிரித்து அவரவர்களும் ஆண்டார்கள் என்பது இலக்கியங்களும் வரலாறும் கூறிய பதிவுகள்.

இவ்வாறு வரலாற்றில் அடையாளப்படுத்தப்பட்ட தமிழ்நாடு பிற்காலச் சோழர்கள் பாண்டியர்களுக்குப் பின் வேற்றின ஆட்சியாளர்களால் தன் நிலப் பரப்பையும் அடையாளத்தையும் படிப்படியாக இழந்தது. ஆங்கிலேயர்கள் வந்தபின், பல பகுதிகள் ஒன்றிணைக்கப்பட்டு அவர்களின் ஆட்சியில் தமிழ்நாடு என்ற அடையாளமே சிறிது காலம் இல்லாமல் இருந்தது.

இந்திய விடுதலை உரிமை உணர்வு முகிழ்த்த போது, தென்னிந்தியாவில் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் எனத் திராவிட மொழிகள் பேசும் மக்கள் அடங்கிய சென்னை மாகாணம் திராவிட நாடு எனத் தன்னை அடையாளப்படுத்திக் கொண்டது. இந்திய விடுதலைக்குப்பின் அவரவர்களும் தங்கள் மொழிப் பகுதிகளைக் குறித்து எழுந்த எழுச்சியில் ‘தமிழ்நாடு’ தன் அடையாளத்தை மீட்டெடுக்கத் தொடங்கியது.

1956இல் மொழிவழி மாநிலங்கள் அமைந்த பொழுது, ‘தமிழ்நாடு’ பெயர் கால் கொண்டது. தமிழ்நாடு தமிழ் பேசும் நில எல்லைகளை மீட்டெடுத்துக் கொள்வதற்கு அண்டை மாநிலங்களோடு பல போராட்டங்களை நடத்தியும் சிலவற்றை விட்டுக்கொடுத்தும் இப்பொழுது உள்ள நில எல்லையைத் தக்கவைத்துக் கொண்டுள்ளது. திருத்தணியையும் குமரியையும் மீட்டதில் மா.பொ.சி, மார்சல் நேசமணி போன்றோருக்குப் பெரும்பங்கு உண்டு.

மொழிவழி மாநிலமாக அமைந்த பின்னும் தமிழ்பேசும் மாநிலம் நெடுங்காலம் ‘மெட்ராஸ் மாநிலம்’ என்ற பெயரிலேயே வழங்கியது. தமிழ்நாடு என்ற பெயரை வைக்க வேண்டும் என்று சங்கரலிங்கனார் உண்ணாநிலைப் போராட்டத்தில் ஈடுபட்டுத் தன் இன்னுயிரை ஈகம் செய்தார். தமிழ்நாடு பெயரை வைக்கத் தீர்மானம் இயற்ற வேண்டும் எனப் பலகாலம் சட்டப்பேரவையில் போராட்டம் தொடர்ந்தது.



இவற்றையெல்லாம் கடந்து இறுதியாக 1968 ஆம் ஆண்டு அறிஞர் அண்ணா தமிழகத்தின் முதலமைச்சரான பின் அவரின் முயற்சியால்தான் ஒருமனதாகச் சட்டம் நிறைவேற்றப்பட்டு, தமிழ்நாடு என்ற பெயரை இந்தத் தமிழ்கூறும் நல்லுலகம் மீட்டெடுக்க முடிந்தது.

தமிழ்மொழியை, பண்பாட்டை, வரலாற்றை மீட்டெடுப்பதன்வழிதான் தமிழ்நாட்டின் பெயரைச் சிறக்கவும், நிலைத்திருக்கவும் செய்யமுடியும்.

அவ்வகையில் போராடிப் பெற்ற தமிழ்நாடு என்ற நம் நாட்டின் பெயரை – அடையாளத்தை மகிழ்ச்சியோடும் எழுச்சியோடும் தமிழர்களாகிய நாம் கொண்டாடி மகிழ வேண்டும்.

அண்டை மாநிலங்களும் தத்தம் மாநிலங்கள் அமைந்த நாளைக் கொடியேற்றி மகிழ்ச்சியோடு கொண்டாடுகின்றனர். கர்நாடக அரசு அந்த நாளை விடுமுறை நாளாக அறிவித்து விருதுகள் கொடுத்துக் கொண்டாடுகிறது.

அறிஞர் அண்ணா பெயரில் அமைந்த மாண்புமிகு அம்மாவின் ஆட்சியில் 2020 ஆம் ஆண்டு முதல் தமிழ்நாடு நாளை அரசு விழாவாகக் கொண்டாட மாண்புமிகு தமிழ்நாடு முதல்வர் எடப்பாடி கே. பழனிசாமி அறிவித்துள்ளார்.

பல ஆண்டுகளாகத் தமிழ்நாட்டில் தமிழ் அமைப்புகள் பலவும் ஆங்காங்கே திட்டுத்திட்டாகக் கொண்டாடி வந்த தமிழ்நாடு உருவான நாளை அரசே எடுத்துக் கொண்டாட 2020இல் அறிவித்துள்ளது வரவேற்பிற்குரிய மகிழ்ச்சியான செய்தியாகும்.

ஆகவே பழந்தமிழ் இலக்கியங்கள் கூறிய, வரலாறு கூறிய தமிழ்நாடு என்று அமைந்த நாளைத் தமிழ்நாடு நாள் எனத் தமிழர்கள் அனைவரும் மகிழ்வோடும் எழுச்சியோடும் கொண்டாடுவோம் !

– முனைவர் மா. பூங்குன்றன்
பதிப்பாசிரியர்
அகர முதலி இயக்ககம்

# மனச்செயல் வகைகள்

| | | |
|---|---|---|
| முன்னுதல் | : | கருத்தோடும் கருத்தில்லாமலும் ஒன்றை உள்ளத்திற் கொள்ளுதல் (to think) |
| உள்ளுதல் | : | ஒன்றை ஊக்கத்தோடு முன்னுதல் |
| உன்னித்தல் | : | ஒன்றை முன்னிக் கண்டுபிடிக்க முயலுதல் (to guess) |
| உணர்தல் | : | புலன் வழியாலன்றி நேரடியாக உள்ளத்தால் அறிதல் |
| அறிதல் | : | புலன்வழியாக உள்ளத்தாற் காணுதல் |
| உகத்தல் | : | ஒன்றைச் சிறப்பாக விரும்புதல் (to choose) |
| ஊகித்தல் | : | காரணகாரியங்களில் ஒன்றை யொன்றாலறிதல் (to infer) |
| எண்ணுதல் | : | சிந்தித்தல் (யோசித்தல்) |
| ஓர்தல் | : | ஒன்றி அல்லது பொருந்த வுணர்தல் |
| ஓய்தல் | : | நுணுகி ஆய்தல் |
| உன்னுதல் | : | ஊழ்கத்தொன்றல் (தியானித்தல்) |
| கண்ணுதல் | : | கவனமாய் முன்னிப்பார்த்தல் (to consider) |
| கணித்தல் | : | கணக்கிட்டுக் கண்டுபிடித்தல் (to calculate) |
| கருதுதல் | : | சற்று விருப்பத்தோடு முன்னுதல் (to intend) |
| சூழ்தல் | : | சூழ்ந்தாராய்தல் (ஆலோசித்தல்) |
| தெரிதல் | : | ஒன்றன் தன்மையறிதல் |
| தெரித்தல் | : | தெரிந்தெடுத்தல் (to Select) |
| தெளிதல் | : | ஐயம் அகலுதல் அல்லது கலக்கம் நீங்குதல் |
| தேறுதல் | : | உறுதிகொள்ளுதல், நம்புதல் |
| தேர்தல் | : | ஆய்ந்தெடுத்தல் |
| நினைத்தல் | : | நினைவுகொள்ளுதல் (ஞாபகங்கொள்ளுதல் – to remember) |
| மானித்தல் | : | முன்னியளத்தல் |
| தீர்மானித்தல் | : | முன்னியளந்து முடிவு செய்தல் |
| உசாவுதல் | : | உரையாடிச் சூழ்ந்தாராய்தல் (discussion) |
| கொள்ளுதல் | : | ஒன்றை நம்புதல் |
| உட்கொள்ளுதல் | : | உள்ளத்திற்கொள்ளுதல் |

நன்றி:
பாவாணர் தமிழ்க்களஞ்சியம் – 21

# மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு...

இந்த ஆண்டிற்கான நோபல் பரிசு தலைப்பு ''முறையான உணவு நோய்த் தடுப்பாற்றல் தருகிறது' என்பதாகும். இதுவே நோய்க்கான ''காப்பு'' என்கிறது அறிவியல் உலகம். சித்தர்களின் துல்லியமான நுண்ணறிவு இதனைப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே ''உணவே மருந்து'' என்று வகுத்துள்ளதை அறிக.

உண்ணும் உணவுக்கும் இலக்கணம் வகுத்தவர்கள் சித்தர்கள். ''அற்றால் அளவறிந்து உண்க .....'' என்று கூறியதன் காரணத்தை ஆராய்ந்தால் ஒருவனது உடலின் தன்மை, பசியின் அளவு, செய்யும் தொழிலின் தன்மைக்கேற்ப உணவை ''அளவறிந்து'' உண்ண வேண்டியதன் முக்கியத்துவத்தை உணரலாம். சித்த மருத்துவத்தின் உன்னத தத்துவம் ''உணவே மருந்து; மருந்தே உணவு'' என்பதாகும்.

நமது ''உணவாதி செயல்களே'' நோய்க்கான முதற் காரணம் என்கிறது சித்த மருத்துவம். ''உண்டிமேல் உண்டியாலும்'', என்ற சித்த மருத்துவ வரிகள் நோய்களுக்கான காரணமாகக் கூறுவது இன்றைய நமது உணவுப் பழக்கத்தைத் தான். பசியின்றி, உடல் உழைப்பின்றி, சரியான உடற்கழிவின்றி வேளாவேளையும், இடையிடையேயும், நேரம் காலமின்றியும் உண்டு கொண்டே இருக்கின்றோம். இதுவே நோய்க்கான முதல் காரணம். மனிதன் ஆரோக்கியமாகவும், இளமையோடும், நீண்ட ஆயுளோடும் வாழும் வழி சொல்வதே சித்த மருத்துவ தத்துவம்.

Health is not at all the absence of disease...... என்பார்கள். நமது உடல் நோயின்றி இருந்தால் மட்டும் போதாது..... உறுதியானதாகவும் இருக்க வேண்டும். இதனையே திருமூலர் ....

''உடம்பார் அழியின் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவுமாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே'

என்று சொல்லி உடம்பிற்கும் ஊன்றுகோலாகிய உயிரை உன்னதப்படுத்துகிறார்.

இதற்கு முற்றிலும் மாறாக, திருவாதவூரார்




பேரா. மரு.இரா.மீனாகுமாரி
இயக்குநர்
தாம்பரம் சனோடாரியம் தேசிய சித்த மருத்துவ நிறுவனம்.


''ஊனினைச் சுருக்கி உள்ளொளி பெருக்கி ....'' என்று கூறுகிறார்.

''அற்றால் அளவறிந்து உண்க .....'' என்கிறார் திருவள்ளுவர்.

சித்தர்களோ,

''ஒரு வேளை உண்பவன் யோகி
இரு வேளை உண்பவன் போகி
மூன்று வேளை உண்பவன் ரோகி''

என்கின்றனர்.

சித்தர்கள் நோய்க்கான காரணங்களில் முதன்மையானது ''உணவாதி செயல்கள்'' என்கின்றனர். இன்று நாம் உண்ணும் முறை, நமது உடல் செய்யும் தொழில், பசியின் அளவு, எதனையும் மனதில் கொள்ளாமல் தேவைக்கும் பல மடங்கு அதிகமாக உண்பதே நோய்களுக்கான



திருவள்ளுவர்



திருமூலர்

காரணங்களாக அமைகின்றன.

உண்ணும் முறை, உணவின் அளவு, எந்த மாதிரி உணவு, எத்தனை முறை உண்ண வேண்டும் என்பதை வரையறுக்கப் பழகி, நமது மரபு சார்ந்த உணவுகளை உண்டு வந்தால் நோய்களிலிருந்து மீளும் வகை புரியும்.

திருவள்ளுவர்,

‘‘தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணின்
நோயள வின்றிப் படும்’’ (947)

என்று கூறியுள்ளதிலிருந்து அளவற்ற நோய்களுக்கான காரணங்கள் இவை என்பதை அறிந்துகொள்ளலாம்.

ஒரு நாட்டின் வன்மையும் வண்மையும் கெடுவதற்கு ‘‘உறு பசியும், ஓவாப் பிணியும்’’ தான் முதற்காரணிகள்.

இன்றைய கணக்கீட்டின்படி நாட்டில் நோயின்றி வாழ்பவர்களின் விகிதம் மிகவும் குறைவு தான். ஆரோக்கிய வாழ்வு வாழ்பவர்களும் குறைவே.

சித்த மருத்துவம் கூறும் தமிழ் மரபு சார்ந்த உணவுகளை அளவுடனும், முறையுடனும் பின்பற்றி வந்தால்... பெறும் நன்மை ஏராளம்.

திருவள்ளுவர், ‘‘இழிவறிந்து உண்பான்கண் இன்பம் போல் நிற்கும் .....’’ (946)

என்ற குறள்வழி அளவறிந்து உண்பவனிடத்தில் இன்பம் நிலைத்து நிற்கும் என்றுரைக்கிறார்.

திருமூலரோ ஒருபடி மேலே போய் வாழ்வின் நோக்கத்தை

‘‘உடம்பினை முன்னம் இழுக்கென்றிருந்தேன்
உடம்பினுக் குள்ளேஉறு பொருள் கண்டேன்
உடம்புள்ளே உத்தமன் கோவில்
கொண்டானென்று
உடம்பினை யானிருந் தோம்புகின்றேனே!’’

என்று உடல்நலத்தைப் போற்றுகிறார். இன்றைய அறிவியல் உலகமும் உண்ணும் உணவின் தன்மை நமது எண்ணங்களிலும், உடலின் செயல்களிலும் வெளிப்படுகிறதெனக் கூறுகிறது.

இவ்வாறான நம் தமிழர் மரபில் கூறப்படும் உணவு சார்ந்த, மண்சார்ந்த பண்பாடு நாம் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே சிறந்த பண்பட்ட நாகரிகமடைந்த சமூகமாக இருந்துள்ளோம் என்பதற்கான சான்றுகளாகும்.

ஆகவே நம் மரபு சார்ந்த சித்த மருத்துவ உணவு மற்றும் வாழ்வியல் முறைகளைப் (Siddha Food and Lifestyle) பின்பற்றி நாமும் நம் தலைமுறைகளும் நீண்டநாள் வாழ்ந்து உலகிற்கே சிறந்த உதாரணமாய் உய்யும் நாள் வந்து விட்டது.

❖

# சொற்குவையும் சொல்லாக்க உத்திகளும்

## – சில கருத்துரைகள்

கலைமகள் வழிபாட்டுக்குரிய செயல்பாடுகளில் ஒன்று, ‘ஏழை ஒருவனுக்கு எழுத்தறிவித்தல்’ என்று பாடிய பாரதி, இத்திருப்பணிக்காக,

நிதிமிகுந்தவர் பொற்குவை தாரீர்
நிதிகுறைந்தவர் காசுகள் தாரீர்
அதுவுமற்றவர் வாய்ச்சொல் அருளீர்

என்று வேண்டுகோள் விடுத்தார். இப்பாடல் வாயிலாக, ‘குவிக்கப்பெற்றிருக்கும் பொன்னில் இருந்து மனம் விரும்பியவண்ணம் வழங்கலாம்’ என்கிற பொருளில் பாரதியார், ‘பொற்குவை’யை முன்வைக்கிறார். அதனடிப்படையில், ஆக்கம்பெறும் சொல், ‘சொற்குவை’.

பன்னெடுங்காலம் தமிழ் என்னும் மொழிக்களஞ்சியத்துள் நிறைந்து கிடக்கும் சொற்குவையில் இருந்து, தேவைக்கேற்ப எடுத்துக்கொள்ள உதவும் நன்முயற்சியாக, ‘சொற்குவைத் திட்டம்’ உருப் பெற்று வருவது வரவேற்புக்குரியது.



முனைவர் சொ.சேதுபதி

நெல்லும் சொல்லும் ஒருவிதத்தில் ஒத்த தன்மையுடையதாகின்றன. தானியவகைகளுள் ஒன்றாகிய ஒற்றைநெல்லில் இருந்து கற்றைநெல் விளைகிறது. மூலவித்தின் தன்மை குறையாது, நீள வளரும் நெல்லினைப்போலக் காலந்தோறும் சொல், விளைகிறது; பயன் தருகிறது. களஞ்சியத்துள் சேமிக்கப்பெற்ற நெல்லை உரிய காலத்தில் எடுத்துப் பயன்கொள்ளத் தவறினால் அது உள்ளீடற்றுப் (க்ஷீணித்துப்)போகும்; அதுபோல்தான் சொல்லும். எனவே, அதனைக் காலந்தோறும் தேவைக்கேற்பப் பயன்படுத்திக்கொள்வது மொழிக்கு மட்டுமன்று; அம்மொழி பேசும் இனத்தின் ஆக்கத்திற்கும் இன்றியமையாததாகிறது. நெல்லைப்போலவே சொல்லும், மண்ணோடும் மரபோடும் மக்களோடும் தொடர்புடையது. நீரைப்போலச் சுழற்சி முயற்சியில் பயன்கோடற்குரியது.

நெல்லும் உயிரன்று நீரும் உயிரன்று
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்

என்று சொல்லில் உயிர்ப்பை நிலைநிறுத்திக் காட்டுகிறது, புறப்பாடல் (186). இப்பாடலில் நெல்லும் நீரும் சொல்லுடன் உயிராகி அமைகின்றன. மக்கட்கும் மொழிக்கும் நல்ல பணி செய்ய முனைகிற தமிழகஅரசின் இச்செயல்திட்டம் வெற்றிபெறுவது உலகத் தமிழர்க்கு உவப்பளிப்பதாகும். காரணம் உலகமுழுவதும் உள்ள தமிழர்களின் சொற்பயன்பாடு ஒத்ததன்மையாக இருப்பதற்குத் தாய்த்தமிழ்நாடு செய்கிற உயிர்ப்பணியாக உயர்பணியாக இது அமையும் என்பதுதான்.

வளர்ந்துவரும் அறிவியல் வேகத்திற்கு நிகராக, சுழன்றுவரும் உலகம் சுருங்கிவருகிறது. உலகமயமாதல் தன்மையால் பல்வேறு மாற்றங்கள், வளர்ச்சிகள் தொடர்நிகழ்வுகளாகின்றன. வாழ்க்கை முறையிலும் பேச்சுமொழியிலும் நிறைய மாற்றங்களை எதிர்கொள்ளவேண்டிய நிலைப்பாடு. இந்தச்சூழலில்,

பொதுத்தன்மைக்கு இடையில் தனித்தன்மையைத் தற்காத்துக் கொள்ளவும் அது பொதுத்தன்மைக்கு எதிராக அமையாமல் இருக்குமாறு பாதுகாத்துக் கொள்ளவும் வேண்டியது காலக்கட்டாயம்.

இவற்றுக்கெல்லாம் ஈடுகொடுத்துத் தன்னை நிலைநிறுத்திக்கொள்ளும் ஆற்றல் வாய்ந்ததாக, உயர்தனிச்செம்மொழியாக நம் தமிழ்மொழி விளங்குவதை நாம் உணர்கிறோம். எனவே, காலத்தேவைக்கேற்பக் கலைச்சொற்களை உருவாக்கியும்,ஏற்கெனவேநம்மொழிக்களஞ்சியத்தில் உள்ள சொற்களைப் புதுக்கியும், உள்ளவாறே கொண்டும் உலகமக்கள் அனைவருக்கும் ஒருமித்த நிலையில் பயன்பாட்டுக்கு அளிக்க முன்வருகிறோம். அதன் வாயிலாகச் சொற்சிதைவு நேராமலும், சொற்பயன்பாடு அறாமலும் கொண்டுசெலுத்துவதன் மூலமாகத் தமிழின் இயங்குநிலையைத் தக்கவைக்க இயலும். தமிழர்களின் மாண்பைச் செழுமைப்படுத்த முடியும். உலகத் தமிழர்களின் ஓர்மை உணர்வை ஊக்கப்படுத்தவும் செய்யலாம்.

அதற்காக நாம் செய்ய வேண்டிய பணிகள் பல. அவற்றுள் சில முறைகளை ஈங்கு எடுத்துரைக்கலாம்.

**சொல்லாக்க உத்திகள் – சில பரிந்துரைகள்**

எழுத்துநடை, பேச்சுநடை என்று இருவேறு நடைகள் தமிழுக்கு உள்ளன. அவற்றுள் ஒன்றுபடும் சொற்களும் உண்டு. மாறுபடும் சொற்களும் உண்டு. இடத்திற்கேற்பப் பொருள் மாறுபடும் சொற்களும் உண்டு.

'எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே' என்கிறது தொல்காப்பியம்.

துறைதோறும் ஒவ்வொரு சொல்லுக்கும் ஒவ்வொரு வகையான புரிதல் தரும் பொருள் இருப்பதையும் நடைமுறை நமக்கு உணர்த்துகிறது.

சான்றுக்கு ஒன்றாய் அமையும் சொல், 'வாரம்'.

இது அன்றாட வாழ்வில், ஏழுநாட்கள் கொண்ட தொகுதியைக் குறிக்கிறது.

உழவுத்தொழிலில், இதற்குக் 'குத்தகை' என்று பொருள்.

கட்டடத்தொழிலில், ஒரு பகுதி, 'தாழ்வாரம்'.

இசைத்துறையில், 'இசைஒழுக்கமும் சொல் ஒழுக்கமும் உடைய பாடல்' என்றும், 'நான்கு வகை இயக்கங்களுள் ஒன்றின் பெயர்' என்றும் இச்சொல் பொருள் தந்தமைகிறது.

பக்தி இலக்கியத்தில், 'தேவாரம்' ஆக வரும் இச்சொல், சித்தர் இலக்கியத்தில், 'தேவாரம்', 'தாவாரம்' ஆகியன பரிபாஷைப்பொருள்கள் உணர்த்த வருகின்றது. இன்னும் இதுபோல், சங்கப் பாடல், சிலப்பதிகாரம், திருமுறை, சித்தர்பாடல் மற்றும் நடைமுறைப்பயன்பாட்டில் வரும் இடங்களை, உரிய தரவுகளோடு சுட்டிக்காட்டி, எடுத்துக்காட்டுகளுடன் தரவேண்டியது இன்றியமையாதது.

இலக்கியச்சொல்லாக வரும் இடத்தை அடையாளமிடத் தனிவண்ணம், அல்லது எழுத்துக் குறியீடு தருவதோடு, அது எந்தெந்த இலக்கியங்களில் பயின்று வருகிறது என்பதையும் அடிக்குறிப்பிட்டுத் தரலாம்.

பேச்சுவழக்கில் சிதைவுற்று ஒலிக்கும் சொற்களின் பொருட்பயன்பாட்டைக் குறிப்பிட்டு, அதன் முழுவடிவையும் அடைப்புக்குள் இட்டுச் சொல்லலாம்.

சான்றாக, ஒரு தொடர், 'தண்ணி காட்டுதல்'. (தண்ணீர் காட்டுதல்)

இத்தொடர், உழவுத்தொழிலில், உழுதல் முதலான பணிசெய்து களைத்து வரும் மாடுகளை, நீர் அருந்துதற்காகக் கழுநீர்த் தொட்டிமுன் கொண்டு சென்று நிறுத்துவதைக் குறிக்கும்.

அதேபோது, நடைமுறையில் ஒருவரோ, குழுவினரோ தம்மைத் தேடுவோர்க்குச் சிக்காமல், போக்குக்காட்டித் தப்பிச்செல்லும் போக்கினையும் இத்தொடர் உணர்த்தும்.

சங்கப்பாடல், பாணர்கள் இசைக்கருவியை வைத்துக் கொள்ளும் பையினை, 'கலப்பை' என்கிறது. உழவுத்தொழிலில், ஏர்க்கருவி 'கலப்பை' ஆகிறது. இந்த இரண்டின் 'கலப்பை'யும் வேறுபடுத்திக் காட்டுவதோடு, இது இவ்வாறு அமைந்ததற்கான பின்புலத்தையும் அறிந்து சேர்க்கலாம்.

இந்த அடிப்படையில், படி என்னும் சொல், படித்தல், வரும்படி, படிக்கட்டு, விலைவாசிப் படி, அகவிலைப்படி, கட்டுபடி என்பதான பொருள்களைத் தருதல்போல் வரும் சொற்களை நிரல்படுத்தி, அகராதித் தெரிவுச் சொல்லாகக் குறித்துக் கொள்ளலாம். இதுபோல் வரும் தொடர்களைத் தனித்தும் நுட்பமாயும் விளக்குகிற வகையில் உரியவாறு எடுத்துக் காட்டுதல் தேவை.

**வட்டாரவழக்குச் சொற்கள்**

'வேகம் குறைவாக' என்றும் 'மெதுவாக' என்றும் நீளச் சொல்லும் முறைக்கு மேலாக, 'பைய' என்ற சொல்வழக்கு, பாண்டிநாட்டில் உள்ளது. இவற்றை, Slow என்ற ஆங்கிலச்சொல் வந்து

அபகரித்துக் கொண்டுவிட்டது. இதுபோல், க்ளீன் (Clean) என்ற ஆங்கிலச் சொல், தமிழின் பல சொற்களுக்குரிய ஒற்றைச் சொல்லாகப் பயன்பாட்டில் நிற்கிறது. பெருக்குதல், கூட்டுதல் என்பதான மங்கலச் சொற்களாக வந்து, தூய்மைப்படுத்தும் செயல்பாட்டைக் குறிக்கும் நிலையில், 'சுத்தமாக்கி' வைத்திருக்கிறது. கணிதத் துறையில், இவற்றுக்கு நேர்பொருளும், நடை முறையில் நுண்பொருளும் தருவன இச்சொற்கள்.

இன்னும் சொலவடைகளாக, பழமொழிகளாகத் தமிழகச் சிற்றூர்களில் பழந்தமிழ்ச் சொற்கள் புழக்கத்தில் இருக்கின்றன. அவற்றை இணைத்துத் தற்காலச் சொற்களுக்குரிய மாற்றங்களாகத் தந்து தொகுக்கலாம். தஞ்சாவூர்ப் பகுதியில் புழங்கும் மராட்டியச் சொற்களும், புதுவைப்பகுதியில் புழக்கத்தில் உள்ள பிரெஞ்சுச் சொற்களும், ஒசூர்ப்பகுதியில் உள்ள தெலுங்கு மற்றும் கர்நாடகச் சொற்களும் தமிழ்ச்சொற்களாக உருப்பெற்றிருப்பதுபோல், பிற பகுதிகளில் உள்ள சொற்களையும் கவனத்தில் கொள்வதுபோல், மலேய, பர்மிய சொற்கள் தமிழில் அமைந்து வந்த பாங்கையும் ஒப்பிட்டுச் சேர்ப்பது உலகத் தமிழ்ச் சொல்லாக்கத் துறைக்கு வித்திடக்கூடும்.

மொழியைப் பொருத்த அளவில், பேச்சு வழக்கில் இருந்து எழுத்து வழக்கிற்கு இடம் பெறுவதற்கான வாயில்கள் படைப்பிலக்கியத்தில் திறந்துவிடப் பெறுகின்றன. வட்டார இலக்கியப் படைப்புகளில் இடம்பெறும் சொற்கள், பொதுத் தளத்தில் புரிந்துகொள்ளச் சிரமம் கொடுப்பது போல் தோன்றினாலும், அவை பெரும்பாலும் பழந்தமிழ்ச்சொற்களின் சிதைபாடுகளையோ, பிறமொழிக் கலப்பின் கூறுகளையோ உள்ளடக்கியிருக்கின்றன.

அண்மையில் சாகித்திய அகாதெமியின் யுவபுரஸ்கார் விருது பெற்ற மலர்வதியின், தூப்புக்காரி – புதினத்தில் வரும் சில சொற்கள், நாகர்கோவில் வட்டாரம் சார்ந்தவை. (ஏஞ்சது–இயைந்தது, விளியுங்க–விளி(அழை)யுங்கள், கடுவண் – கடுவன்) இவற்றுக்கான குறிப்புகளைக் கொடுக்கும் அதேபோது, வேறு இடங்களில் இச்சொற்கள் எத்தகு பயன்பாடுகளைக் கொண்டமைகின்றன என்பதையும் வகைப்படுத்திக் கொடுக்கலாம். தோப்பில் முகமது மீரான், கி.ராஜநாராயணன், மேலாண்மை பொன்னுச்சாமி போன்றோரின் படைப்புகளில் இடம்பெறும் வட்டாரச்சொற்களையும் இதனோடு இணைத்துச் சிந்திக்கலாம்.

இவைபோக, வட்டாரச் சொல்லகராதிகளாக, ஆங்காங்கே வெளிவந்திருக்கக்கூடியவற்றை வாங்கி, இணைத்துத் தொகுத்தும் பகுத்தும் ஒப்பிட்டும் பொதுமையுணர்த்தும் வகையில் இத்திட்டம் செயல்படலாம். கொங்கு வட்டாரச் சொல்லகராதி, செட்டிநாட்டுச் சொல்லகராதி, சென்னை வட்டாரச் சொல்லகராதி, மற்றும் தென் மற்றும் வட தமிழகப்பகுதிகளை உள்ளடக்கிய சொல்லகராதிகள் வந்திருப்பின் அவற்றை வாங்கியும், இல்லாத பகுதிகளுக்குரிய சொற்களில் பலவற்றைச் சேகரித்தும் தொகுத்துப் பகுக்கலாம். இத்தகு முயற்சியில் ஏற்கெனவே முனைந்தவர்கள் எழுதிய நூல்களில் இருந்தும் பெற்றுக்கொள்ள இயலும். சான்றாக, செட்டிநாட்டு வழக்குச்சொற்களை, சோமலெ எழுதிய செட்டிநாடும் செந்தமிழும் நூலில் இருந்து பெற்றுக் கொள்ளலாம்.

இந்த வரிசையில் மொழிபெயர்ப்பு நூல்களின் மொழியாக்கச் சொற்களையும் கவனத்தில் கொள்ள வேண்டியிருக்கிறது. இந்திய மொழிகளில் இருந்தும், அயலக மொழிகளில் இருந்தும் தமிழுக்கு வந்த மொழிபெயர்ப்பாக்கங்களின் வாயிலாக வந்து தமிழில் நிலைத்த கலைச்சொற்கள், புதிதாக ஆக்கம் கண்ட சொற்கள் இவற்றையும் இணைத்து, அவற்றுள் தற்போது கொள்ள வேண்டிய சொற்கள் இவையென்று வரையறுத்துத் தருவது இனிவருங்கால மொழி பெயர்ப்பாளர்களுக்கு உதவுவதோடு, இவற்றின் பொருள்கள் இவைதாம் என்று தடுமாற்றம் இன்றி, உலகத்தமிழர்கள் யாவரும் புரிந்துகொள்ள ஏதுவாகும்.

மொழிபெயர்ப்புக்கென்று இதழ்கள் நடத்தி வரும் இதழாளர்கள் (திசைஎட்டும் – குறிஞ்சி வேலன்) மொழிபெயர்ப்பாளர்கள் (கவிஞர் சிற்பி, யூமா. வாசுகி, சுசீலா, கொ.மா. கோதண்டம், இராஜேஸ்வரி கோதண்டம், கே.நல்லதம்பி, மற்றும் மொழிபெயர்ப்புக் கான விருது பெற்றவர்கள்), மொழிபெயர்ப்புப் பணிகளைச் செய்துவரும் நிறுவனத்தார் (பொள்ளாச்சி டாக்டர் மகாலிங்கம் நினைவு மொழிபெயர்ப்பு மையம் போன்றவை) ஆகியோரையும் இத்திட்டத்தின்கீழ் ஒருங்கிணைத்து இப்பணிகளுக்கு உதவிகள் பெறலாம்.

துறைதோறும் புதிது புதிதாக வரும் பொருள்களுக்கு நேர்பொருளைத் தருகின்ற தமிழ்ச் சொற்களைக் கண்டறிந்து, பயன்பாட்டிற்குக் கொண்டு வருகிறபோது, அதுவே தன்னைச் செப்பனிட்டுக் கொள்ளும். சுருக்கியோ, விரித்தோ, சற்றே திருத்தியோ மக்களின் புழங்கு சொற்களாக உருப்பெறும் வண்ணம் வடிவமைக்கலாம். பன்னெடுங்காலம்,

வேளாண்மை என்று எழுத்துவழக்கிலும், ‘வெள்ளாமை‘ என்று பேச்சு வழக்கிலும் இருந்த சொல்லை, ‘விவசாயம்’ மாற்றிவிட்டது. அதன் அடிப்படையில் தமிழில், ‘விவசாயி’ வந்துவிட்டான். ஆங்கிலத்தில், Agriculture என்ற சொல் வந்துவிட்டது. ஆனால், இன்று அந்தப் பொருளில் இல்லாது, அது Agribusiness ஆகிவிட்டது என்பார் கோ.நம்மாழ்வார். இந்த நிலையில், வேளாண்மை அதற்குரிய தகுதிப்பாட்டைத் தக்கவைத்துக் கொள்ள இயலாத நிலையில், உழவு, உழவன் என்ற சொற்களை அடிப்படையாகக் கொண்டு, உழவாண்மை என்ற சொல்லை உருவாக்கியிருக்கிறார். அதுபோல், பிறதுறைச் சொற்களையும் தமிழாக்கிக் கொள்ள இயலும். உழவுத்துறையைப் பொருத்த அளவில், ஆங்கிலச்சொற்களுக்கு நிகராக, தமிழில் உழவர்கள் பயன்படுத்தும் சொற்களையே கொண்டு வருதல் நல்லது.

துறைதோறும், தமிழ்ச் சொற்களை, கலைச்சொற்களை ஆக்கும் பணிகளுக்கு இடையில் ஏற்கெனவே உருவாக்கம் பெற்ற கலைச்சொற்கள் காலப்போக்கில் கண்டுள்ள மாற்றங்களையும் தந்து அதன் காலப்பின்னணியையும் இணைத்துத் தொகுக்கலாம். இதற்குக் காலந்தோறும் வெளிவந்துள்ள தமிழ் இலக்கியப் படைப்புகள் துணைபுரியும். எனவே, காலந்தோறும் தமிழ் இலக்கியங்களில், ஆக்கம்பெற்ற புதிய சொற்களை, இலக்கிய வரலாற்றின் அடிப்படையில் எடுத்துத் தொகுப்பது, பல புதிய சொற்கள் உருவாக்கத் துணைபுரியும். கூடவே, அதற்கு இணையான ஆங்கில, வடமொழிப்பெயர்களையும் இணைத்துத் தரவும் செய்யலாம்.

குறிப்பாக, சிறார் இலக்கியத்தில் இத்தகு சொற்பயன்பாடுகள் காலந்தோறும் எவ்வாறு பயன்படுத்தப்படுகிறது என்பதைத் தொகுப்பதும் பயன் நல்கும். காரணம், புகைவண்டி, ரயில் வண்டி, என்ற சொற்கள் தொடர்வண்டியாக இப்போது நிலைபெற்றிருக்கிறது.

கணிப்பொறி, கணிப்பான் என்ற சொற்கள் புழக்கத்திற்கு வந்து இப்போது கணினி என்ற சொல் இயல்பாகி விட்டது. இவ்வாறே, விமானம், வானவூர்தி, மிதிவண்டி, போன்ற சொற்களும் சிறார் பாடல்களில் இடம்பெறக் காணலாம். இந்த இடத்தில் இன்னொரு செய்தியையும் முன்வைக்க விரும்புகிறது எனது அனுபவம். புதிய கலைச்சொல்லாக்கத்திற்குப் பெரியவர்களின் துணையை நாடுவதுபோல, வளரும் சிறார்களிடமும் சில எளிய, அன்றாடப் புழங்கு பொருள்களுக்குரிய பெயர்களை வைக்கக் கோரலாம். விளையாட்டுப்போல, பல புதிய சொற்களைப் பயன்பாட்டுக்கேற்ப அவர்கள் சொல்லிவிடுவார்கள்.

சிங்கப்பூர் தமிழ்ப்பாட நூலில், Lift என்ற ஆங்கிலச்சொல்லுக்கு இணையாக, ‘மின்தூக்கி’ என்ற சொல் பயன்பாட்டில் உள்ளது. இதுபோல், மலேசிய, சிங்கப்பூர்ப் பகுதிகளில் வழங்கி வரும் தமிழ்ச்சொற்களுக்கும் நமது தமிழ்ச்சொற்களுக்கும் இடையில் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை அவ்வப்போது குறித்துக்கொண்டுவந்து, நிறைவாக அவற்றில் பொதுமை காணலாம்.

அறிவியல் கலைச்சொல்லாக்க முயற்சியில் ஈடுபட்டு வருகிற, மருத்துவர்கள், அறிவியலாளர்கள் (நெல்லைசு.முத்து, நாசா விஞ்ஞானி கணேசன், மயில்சாமி அண்ணாதுரை) போன்றவர்களோடு, மரம், கற்சிற்பக் கலைஞர்களையும் (கும்பகோணம் உமாபதி ஆச்சாரியார்), இசைத்துறை மற்றும் நாடகத்துறைக் கலைஞர்களையும் (முனைவர் அரிமளம் சு.பத்மநாபன், முனைவர் மா.வயித்தியலிங்கன்) கொண்டு அவ்வத்துறைசார் கலைச்சொற்களைத் தேடிப் பாதுகாக்கலாம். இன்றைக்கு, அவ்வத்துறைகளில் பயன்படுத்தும் கருவிகளுக்குப் பாமரர்களாக இருந்து பணிசெய்யும் தொழிலாளர்கள் இட்டழைக்கும் பெயர்கள் எவையெனக் கண்டு அவற்றுள் கொள்வன கொண்டு மாற்றுவன மாற்றித் தொகுக்கலாம்.

– முனைவர் சொ.சேதுபதி,
(கிருங்கைசேதுபதி) துணைப் பேராசிரியர்,
தமிழ்த்துறை,
பாரதிதாசன் அரசினர் மகளிர் கல்லூரி,
புதுச்சேரி– 605003

❖




# சட்டத் தமிழாக்கம்– இந்திய அரசமைப்பு

சட்டத் தமிழாக்கம் மாயூரம் முன்சீப் வேதநாயகம் பிள்ளை1862 இல் வெளியிட்ட ‘சதர்க்கோர்ட்டாரவர்களின் சித்தாந்த சங்கிரகம் ‘‘என்ற நூலுடன் தொடங்குகிறது. ‘சதர்க் அதாலத்’ என்று பெயர் பெற்றிருந்த உயர்நீதிமன்றம் 1805 முதல் 1860 வரை ஆங்கிலத்தில் வழங்கிய 1448 தீர்ப்புகளின் தமிழாக்கத்தை அந்த நூல் கொண்டிருக்கிறது .

எடுத்துக்காட்டாக, இந்திய அரசமைப்பின் தமிழாக்கத்தைக் காணலாம். 1988 ஆம் ஆண்டு வரை அரசு வெளியீடாக அரசமைப்பின் தமிழாக்கம் வெளிவரவில்லை. ஆனால் தமிழ், சிந்து, அசாம் மொழிகள் தவிர ஏனைய இந்திய மொழிகள் அனைத்திலும் அரசமைப்பின் அதிகாரவுரிமை பெற்ற மொழிபெயர்ப்புகள் வெளிவந்திருந்தன. அவை பற்றி ஒரு சிறிது காணலாம்:

‘‘மலையாளச் சட்ட மொழிபெயர்ப்பில் appeal , award, arrest, act, certificate, judge, magistrate, notice, payment, prosecutor, processes served, summons , warrant, vote போன்ற எண்ணற்ற சொற்களை மொழிபெயர்க்காமல், அவற்றின் ஒலிபெயர்ப்பைக்கொண்டோம்’’

(எம். பிரபா, தலைவர், மலையாள சட்ட ஆட்சிமொழி ஆணையம்)

‘‘கன்னட மொழிபெயர்ப்பில் appeal, civil ,claim, decree ,domination , police, stamp ,warrant முதலான 39சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன’’. ( Kanthi Rao, Additional Director of Language Development of Kannada )

‘‘மராத்தி மொழிபெயர்ப்பில் appeal, cheque, notice, railway, telephone, ticket ,warrant போன்ற ஏழு ஆங்கிலச் சொற்களே இடம்பெற்றன.’’

‘‘இந்தியில் appeal ,council , degree, fees, magistrate, nudance, pension, quarranttine, summons, warrant முதலான 19 சொற்கள் ஒலிபெயர்க்கப்படுகின்றன.’’

‘‘தமிழ்நாட்டு சட்ட ஆட்சி மொழி ஆணையத்தில் உள்ள நாங்கள் sessions, will, notary , attorney முதலான ஆங்கிலச் சொற்களையும், முகலாயர் காலத்தில் இருந்து பேச்சு முறையிலுள்ள ஜமீன், ஜப்தி, ஆஜர் போன்ற சொற்களையும் இருத்தி வைத்துக் கொண்டுள்ளோம்’’

(நீதியரசர் மகராசன், தலைவர், தமிழ்நாடு சட்ட ஆட்சிமொழி ஆணையம்)

‘‘சில ஆங்கிலச் சொற்களுக்கு உரிய சொற்கள் தமிழில் இல்லை. Sessions, judge, magistrate, summons, warrants இச்சொற்கள் முறையே செஷன்ஸ், நடுவர், ஆஜர்கட்டளை, பிடிகட்டளை என மொழிபெயர்க்கப் படுகின்றன. இருப்பினும், appearance in court என்பதற்கு நேர் இணையான சொற்கள் தமிழில் காண முடியவில்லை. particular act has come into force என்பதற்கு அமல் என்னும் சொல்லும் ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது .’’

(அ.சிதம்பரம், முழுநேர உறுப்பினர், தமிழ்நாடு சட்ட ஆட்சிமொழி ஆணையம் )

மேற்கூறிய கூற்றுக்கள் எல்லாம் சட்டங்களை அவரவர் தாய்மொழியில் மொழிபெயர்க்கும் பொறுப்பில் உள்ளவர் கூறியவை.

நேர் இணையான தமிழ்ச் சொற்கள் இல்லை என மேலே உறுப்பினர் குறித்த ஆங்கிலச் சொற்களுக்கு முறையே ‘‘அமர்வு மன்ற நீதிபதி, குற்றவியல் நடுவர், அழைப்பாணை, பிடியாணை, நீதிமன்றத்தில் முன்னிலையாதல், செல்லாற்றல்’’ என்ற தமிழாக்கங்கள் அமைக்கப்பட்டன.

1981இல் நீதியரசர் மகராசன் குழுவினர் செய்த இந்திய அரசமைப்பின் தமிழாக்கத்தில் அயல்மொழிச் சொற்கள் மிகுதியாக இருக்கின்றன என்ற காரணம் காட்டி, அன்றைய பிரதமர் இந்திரா காந்தியால் வெளியிடப்படுவதற்கு நாள் குறிக்கப்பட்ட ஒரு வாரத்திற்கு முன் முடக்கப்பட்டது. நீதியரசர் மகராசனும் ஏனையோரும் பதவி விலகினர். அது முதல்

சில சிக்கல்கள் எழுந்தன. 1983இல் அன்றைய மாண்புமிகு முதலமைச்சர் எம்.ஜி.இராமச்சந்திரன் அவர்கள் I am personally looking into the matter என்று மைய அரசுக்கு நேர்முக மடல் எழுதும் அளவுக்கு நிலைமை சென்றது. அப்பொழுது சட்ட ஆட்சிமொழி ஆணையத்தில் பணியாற்றிய என்னிடம் சில அறிவுறுத்தங்களுடன் அரசமைப்பின் தமிழாக்கத்தை அரசு ஒப்படைத்தது. நான் நிறைய அறைகூவல்களை எதிர்கொள்ள வேண்டியிருந்தது

எடுத்துக்காட்டாக abrogate, annul, cancel, repeal, rescind, revoke, set-aside, supersede, override போன்ற எல்லாச் சொற்களுக்கும் ரத்து என்ற சொல் தமிழாக்கத்தில் காணப்பட்டது. ஆங்கிலத்தில் அந்தச் சட்டம் அல்லது விதி எவ்வாறு அழிக்கப்படுகிறது. ஒழிக்கப்படுகிறது என்ற நுட்பம் உள்ளது. ஆனால் தமிழில் பயன்படுத்திய அயல் சொல்லாகிய ரத்து என்பதில் அது காணப்படவில்லை. அதைத் தமிழில் செய்ய முடியாது என்று உயர் ஆய்வுக்குழுவினர் அப்படியே போட்டு விடலாம் என்று வற்புறுத்தினர். ஆனால் நான் அதை ஏற்காமல் அறுத்தல் / அறவு என்பதை அடிச்சொல்லாகக் கொண்டு அதிலிருந்து முன்னொட்டுச் சொற்களை இணைத்து abrogate–ஒழித்தறவுசெய், annul–செல்லறவுசெய், canceட–அறவுசெய், repeal–நீக்கறவுசெய், resçind– அழித்தறவுசெய், revoke–பின்னறவுசெய், set aside–ஒதுக்கறவு செய், supersede– மேலறவுசெய், override– ஊர்ந்தறவு செய் எனத் தமிழாக்கம் செய்து ஆங்கிலத்தில் உள்ள நுட்பங்களைத் தமிழிலும் புலப்படுத்தினேன்.

பல்வேறு தொழில்களைக் குறிக்கும் சொற்களுக்கு நேரிணையான தமிழாக்கம்: industry – தொழில், trade – வாணிகம், commerce– பெருவாணிகம், avocation – தேர்தொழில், bussiness – அலுவல்தொழில், calling–கொள் தொழில், occupation – வாழ்க்கைத் தொழில், profession – பணித் தொழில், vocation– செய் தொழில் , work –வேலை.

இவ்வாறு சொல்லாக்கங்கள் செய்வதற்கு ஆங்கிலம் – தமிழ் அகராதிகள் பெரிதும் உதவுவது இல்லை. நீதிபதிகள் தீர்ப்புரையில் சில இடங்களில் நுட்பமான வேறுபாட்டைப் புலப்படுத்தி இருப்பார்கள். அவற்றின் துணைகொண்டு இத்தகைய சொல்லாக்கத்தை நான் மேற்கொண்டேன்.

இவை போன்று ஏறத்தாழ 300 கலைச் சொற்களை அந்த அரசமைப்புத் தமிழாக்கத்தில் நான் செய்துள்ளேன்.



பேரா. கு. சிவமணி

13–8–1988 அன்று சென்னை இராசாசி மன்றத்தில் அன்றைய மைய அரசின் சட்ட அமைச்சர் திரு சங்கரானந்து தலைமையில், ஆளுநர் டாக்டர் பிசி அலெக்சாந்தர் வெளியிட அதன் முதல் படியை உச்சநீதிமன்ற நீதியரசர் இரத்தினவேல் பாண்டியன் பெற்றுக் கொண்டார். 38 ஆண்டுகளாகத் தமிழில் அதிகார உரிமைபெற்ற அரசமைப்புத் தமிழாக்கம் இல்லை என்றபழி என் பணியினால் நீங்கியது.

நான் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதித் திருத்தப்பணித் திட்டத்தில் பதிப்பாசிரியராக இருந்தபோது ஆக்கிய சட்டச் சொல் அகராதியை (தமிழ் –தமிழ்– ஆங்கிலம்) சென்னைப் பல்கலைக்கழகம் வெளியிட்டது ஏறத்தாழ 25 ஆண்டுகள் கடுமையாக உழைத்து உருவாக்கிய ‘சட்ட ஆட்சியச் சொற்களஞ்சியம் ‘ (ஆங்கிலம் –ஆங்கிலம்–தமிழ்) என்னும் நூலை – (ஏ–4 அளவு தாள், 1400 பக்கங்கள், ஏறத்தாழ 30,000 பதிவுகள் , ஆயிரக்கணக்கான சட்ட மேற்கோள்கள். தீர்ப்பு வழிச் சட்டங்கள் ஆகியவற்றைக் கொண்ட) ஒரு பெரும் களஞ்சியத்தை 2012இல் புதுச்சேரி அரசின் சட்டத்துறை வெளியிட்டது.

நான் கரந்தைக் கல்லூரி முதல்வர் என்ற நிலையில் தமிழறிஞர்கள் பரவலாக அறிவர். ஆனால் கல்லூரியில் பணியாற்றியதைவிட சட்ட ஆட்சி மொழி ஆணையத்தில் கூடுதல் காலம் பணியாற்றி வாழ்நாள் அருஞ்செயல் என்று சொல்லத்தகும் பெரும் பங்களிப்பைச் சட்டத் தமிழுக்குச் செய்திருப்பதை ஒருசிலரே அறிவர்.